# போர்வாள்




காமராஜர் சென்ற ஒரு மாதகாலமாக செங்கற்பட்டு மாவட்டம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து, திராவிடர் கழகப் பிரசாரத்தை முறியடித்தே தீருவேன் என்று ஆங்காங்கே வீரமுழக்கம் புரிந்திருக்கிறார்—சுண்டெலி சீறுகிறது சிங்கத்தைப் பார்த்து!

வாள் 2
வீச்சு 31
–4–49

ஆசிரியர்கள் :-
காஞ்சி மணிமொழியார்.
மா. இளஞ்செழியன்

அணா $1\frac{1}{2}$

ஒரு சிறு நாடகம்

# பூதேவர் தோல்வி!

[சென்ற இதழ் தொடர்ச்சி]

## காட்சி 4.

**இடம்** :—மாலூரை யடுத்த மலைக் கோவில்

**காலம்** :—அதிகாலை

மாலூர் வாசிகளாகிய ஊராளி, உதயணன், பெத்தியணன், செட்டியப்பன், பச்சையப்பன், கறுப்பணன், பாவாயி, செம்மாயி, செல்லாத்தா, முதலியவர்கள், மிக்க பயபக்தியுடன், பூசாரி மசக்காளியைப் பின் தொடர்ந்து கோவிலுக்குள் வருகின்றனர். வெளிக் கோபுர வாசலில் காவலேஸ்வரராகிய பூதநாதன், கணநாதன் இருவர் சிலைகளையும் பீடங்களில் காணாமல் திகைப்படைகின்றனர்!

பூசாரி மகா மண்டபத்துள் நுழைகின்றான்; ஊர் மக்களும் பின் தொடர்கிறார்கள். அங்கே இருக்கவேண்டிய ஆதிநாதன், சோமநாதன், லோகநாதன், சிந்துநாதன் இவர்கள் பீடங்களும் காலியாயிருப்பதைப் பார்க்கின்றனர். பூசாரி லோகநாதன் மூலஸ்தான சந்நதிக்கு ஓடுகிறான், அங்கும் பீடம் காலியாயிருக்கிறது. துவாரபாலகர் பீடங்களும் காலி! எல்லாப் பீடங்களிலும் ஆண்டவன் சிலைகள் இல்லாததைக் கண்டு, பூசாரி, "ஆ தெய்வமே! லோகநாதா!" என்று அலறிக்கொண்டு கீழே விழுகிறான். மற்றவர்களும் "ஆ தெய்வங்களே எங்களை இப்படிக் கைவிடலாமா: இனி நாங்கள் எப்படிப் பிழைப்போம்! இது தகுமா? தருமமா?" என்று பலவாறு அழுது அரற்றுகின்றனர்.

பூசாரி மூர்ச்சை தெளிந்து, 'லோகநாதா! உன் பூஜை செய்யப் பிறந்த நான், நீ போன பின்பு உயிரோடு வாழவேண்டுமா? இந்த இருள் நிறைந்த பாழுலகில் இனி யிருக்கமாட்டேன். என்னையும் உன்னிடம் அழைத்துக்கொள். நேற்றுச் சந்தைக் கடையில் நீ சொன்னபோது நம்பாமல் போனேனே! அப்போதே கோயிலுக்கு வந்திருந்தால் ஒரு வேளை உன்னைப் போகவிடாமல் தடுத்திருப்பேனே!" என்று மறுபடியும் உரக்கக் கூவி அழுகிறான்.

பெத்தியணன்: "லோகநாதன் போன பிறகு நாம் எப்படிப் பிழைக்க முடியும்?"

பாவாயி: "ஆவதும் அவனாலே அழிவதும் அவனாலே! அவனில்லாமல் என்ன நடக்கும்?

ஊராளி: "நாளைக் காலையில் சூரியன் வெளியே கிளம்பாமல், சமுத்திரத்திலேயே தூங்கிட்டாக் கூட கேட்கிறவர்கள் யார்?"

கறுப்பணன்: "வானமே இடிஞ்சு விழுந்தாலும்தான் யார் கேட்கப்போறு?"

செம்பாயி: "என்னவோ நாங்கள் தெரிந்தும் தெரியாமலும் செய்த பிழைகளைப் பொறுத்து இந்த ஒரு தடவை மன்னிப்புக் கொடுக்கவேணும் லோகய்யா!"

பூசாரி: "ஏ லோகநாதா! உன் உண்மை பக்தனாகிய என்னைப் பரிசோதிக்கலாமா? ஆ! ஒன்றும் தோன்றவில்லையே! என் செய்வேன்!"

இந்த சமயம், தூரத்திலிருந்து இடிபிடிப்பதுபோல் சப்தம் உண்டாகிறது. எல்லோரும் அந்த சப்தம் கேட்டு நடுங்குகின்றனர். சப்தம் நின்று விடுகிறது எங்கோ இருந்து ஒரு ஆந்தையின் சீறல் கேட்கிறது. மறுபடி எங்கும் முழு அமைதி. மக்கள் லோகநாதன் சந்நிதியின் முன் மண்டபத்தில், இருந்த இடம் பெயராமல் அசைவற்று இருக்கின்றனர். அப்போது கோயிலினுள்ளிருந்து ஓர் அசரீரி வாக்குக் கேட்கிறது: "ஹே பக்த சிரோன்மணிகளே! மனம் வருந்த வேண்டாம்! நாம் நம் பரிவார தேவர்களுடன் நேற்றைக்கு முன் தினம், இவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டுப்போனோம். தேவலோகத்தில் தேவேந்திரன் கொடியதவம் செய்து, நம்முடைய தரிசனத்திற்காக, வெகு நாட்களாகக் காத்திருக்கிறான்! அவனது தபாக்கினி நம்மைத் தாக்கி இங்கு இனியும் தாமதிக்க முடியாதபடி செய்து உடனே இந்திரனுக்குக்காட்சி கொடுக்கும்படி தூண்டியது! இந்திரனுக்குக் காட்சியளித்துவிட்டு 5 வினாடியில் நாம் நம் யதாஸ்தானம் வந்து விடுவோம். பயப்படாதீர்கள், நம் கணக்கின்படி இப்போது இரண்டு வினாடியாயிற்று. மானிடர் கணக்கின்படி இன்றைக்கு மூன்றும் நாள் மாலையில் நாம் நம் கோயிலுக்குத் திரும்பிவருவோம். எல்லாம் சுலபமாக முடியும்" அசரீரி வாக்கைக் கேட்டு மக்கள் எல்லாரும் ஆனந்தங் கொண்டு ஆரவாரம் செய்கின்றனர்.

பூசாரி: லோகநாதா! எங்கள் வாழ்வே! வாழ்வின் துணையே! உன் அன்புக்குப் பாத்திரமாக நடந்துகொள்வேன்! உறுதி உறுதி.

பெத்தியணன்: "சாமி வாக்குக் கொடுத்தபடி! நாளை ஞாயிற்றுக்கிழமை சாயந்திரம், சாமிகளை வரவேற்பதற்குத் தயார் செய்ய வேண்டியது,"

செட்டியப்பன், "ஏ ஊராளியப்பா, இன்னிக்கே உற்சவம் ஆரம்பிக்கச் சொல்லு."

ஊராளி: "சரியான உற்சவம் வச்சுப்போடலாமின்னு! ஊருக்குப் போனதும் தோட்டியைக் கூப்பிட்டுச் சாட்டிட்டு வரச்சொல்றேன்! வருஷா வருஷத்தைவிட இந்தவருஷம் பலமாச் செய்யணுமின்னுதான் நெனச்சிருக்கிறேம்."

பச்சையணன்: 'நான் மூணு கிடாய் கொடுக்கிறேன்."

செம்பாயி: "நான் பத்து வள்ளம் கப்பு குத்தி விளக்கெடுத்துக் கொண்டு வரேன்!"

செல்லாத்தா: "நான் அஞ்சு ஊட்டக்கொடுத்து அஞ்சு வள்ளம் நெல்லுக்குத்திப் பொங்கலிடறேன்."

கறுப்பாயி: "நான் ஊருசுத்திக் கோழி சுத்தி அடியளந்து கும்பிட்டு அஞ்சுவள்ளம் தினை குத்தி விளக்கெடுக்கறென்."

பூசாரி: "எல்லாரும் அவரவர் சக்திக்குத் தகுந்தபடி சாமிகாரியம் செய்யவேண்டியது! பிரார்த்தனை செய்துவிட்டுப் பிறகு தவறக்கூடாது! மனசிலே நினச்சிட்டாக் கூட லோகநாதனுக்குத் தெரியாம லிருக்காது. அப்புறம் கும்பிட்டு

[10-ம் பக்கம் பார்க்க]



# ஹிட்லர்தான் இல்லை!

[அரங்கண்ணல்]

தூசு படிந்திருந்த கண்களை ஒருமுறை கசக்கி விட்டுக்கொண்டு பார்த்தான். கட்டிட வேலைப்பாடு அவன் கண்களைக் கூசச் செய்தது. அண்ணாந்து பார்த்தபடியே ஒவ்வொரு கட்டிடம் மீதும் தனது ஆத்திரம் கொந்தளிக்கும் கண்களைப் பதித்துக்கொண்டே யிருந்தான்! பட்டாடை போர்த்தி மாளிகையின் அழகுச் சாளரங்களிலிருந்து எட்டிப் பார்க்கும் மோகன மாதர்......வேகமாக, நாழிகையானதைக் காட்டும் பரபரப்புடன், கையில் சட்டப் புத்தகங்களைத் தாங்கி, பளிங்கிழைத்த படிக்கட்டுகளிலிருந்து இறங்கும் வக்கீல்கள்......சலவை கலையாத உயர் ரக உடைகள், காற்றில் மெதுவாக அசைய, 'தன் நடை' அலங்காரத்துடன், வாயிலில் நின்று இரு கையை ஆட்டி சென்றுவா என்று மழலைமொழியில் அனுமதியளிக்கும் 'ஆபரண மேஜைக'ளான தங்கள் அருமைக் குழந்தைகளைப் பார்த்துக்கொண்டே வெளியேறும் டாக்டர்கள், இன்னிசைவாணர்கள்......இன்னோரன்ன உல்லாசபுரி மனிதர்கள் அவன் கண்களில் தென்பட்டனர். ஒவ்வொரு உருவத்தையும் உற்று, உற்றுப் பார்த்தான். அவன் பார்வையில் ஏக்கமும் 'ஏன்?' என்ற கேள்வி விளைத்த ஆத்திரமும் நிழலாடிக் கொண்டிருந்தன! அவன் வாய் முணுமுணுத்தது "யூதன்...யூதன்..." என்று! அன்று முணுமுணுத்த அந்த முணுமுணுப்புத்தான் பின்னர் ஒரு காலத்தில் ஜெர்மனியில் கடும் புயலாகமாறிற்று; "யார் யூதன்?" என்று ஆத்திரக் கூச்சலை எழுப்பியது; சொந்த நாட்டினரின் வாழ்வைச் சூறையாட வந்த சனியன்கள் என்று முழக்கமிடச்செய்தது! அவன் கண்ட காட்சிகள்......... அதன் விளைவாக அவன் எண்ணத்தில் எழும்பிய புயல் அலைகள் இத்தனையும்தான் ஜெர்மனியில் வாழ்ந்த யூதர்களைப் படுத்தாதபாடு படுத்திற்று பின் ஓர் நாள்!

* * *

"என் நாட்டான், என் சகோதரன், ஜெர்மனியான், 'இல்லை' யென்று ஏங்கி, வேதனைக் குரலுடன், வெம்பி மனமுடைந்து சாகிறான்."

"காலை முதல் ஓடியாடி, மூட்டை சுமந்து, செருப்புதைத்து உடலில் ஓடும் இரத்தத்தை வியர்வையாக்கி, உழைத்தும் வயிறார உண்ணவும் வசதியின்றி வதைகிறான்,"

"என் சகோதரனுக்கு இருக்க இடமில்லை...உயர்பதவியில்லை...... உல்லாசமில்லை...உற்சாகமில்லை... கடைசியாக சுய உணர்வுமில்லை!"

"அதே வேளையில் அதோ எங்கிருந்தோ வந்தவர், நகத்தில் அழுக்குப்படாமல், அரசியலில், அறிவியலில் ஏகபோக மன்னர்களாக வாழ்கின்றனர். ஆடலும் பாடலும், இசையும் கூத்தும் அவர்கள் வாய்ச் சொற்களாகவும், சாதாரண நடைகளாகவும் இருக்கின்றன. சொகுசுப்பார்வை அவர்களுடைய சொந்த சொத்தாக இருக்கிறது. சொக்க வெள்ளிப் பாற்குடமோ என்று வர்ணிக்கத் தக்க அழகுவாய்ந்த மாதரும், அமுதஊற்றோ என்று ஆர்வமுடன் அணைக்கத் தூண்டும் அழகுச் சிறுமியரும் அங்கே யிருக்கின்றனர்...

அங்கே...

. வக்கீல்கள், டாக்டர்கள்; அறிஞர்கள், அரசியல் வாதிகள், ஆசிரியர்கள்.

இங்கே:

சுரங்கத் தொழிலாளி, கொத்தன், கொல்லன், சக்கிலியன், உழுபவன்......

அங்கே போகவாழ்வு!

இங்கே வேதனை நிலை!

மாடமாளிகை—மண் குடிசை!

கோலாகலம்—குமுறும் வேதனை!

கொஞ்சும் வாழ்வு—மிஞ்சும் வேதனை!

எங்கிருந்தோ வந்த அவர்கள் வசம் ஆட்சியின் சூத்திரம்! அவர்கள் வசமே பத்திரிகைகள்... இந்த நாட்டு சொந்தக்காரர்களாகிய எங்களிடமோ......வறுமை, வாட்டும் வேதனை, பசி, பஞ்சம் பட்டினி தெருவீதிகளிலே திரிந்து [illegible]

## மறைந்த மாவீரர்



நண்பர் அழகிரிசாமி முடிவு எய்தியது பற்றி நான் மிகவும் துக்கப்படுகிறேன். அழகிரிசாமி எனக்கு 30 ஆண்டு நண்பரும் என்னை மனப்பூர்வமாய் நிபந்தனை இல்லாமல் பின்பற்றி வருகிற ஒரு கூட்டுப் பணியாளருமாவார். கொள்கை வேற்றுமை, திட்ட வேற்றுமை என்பது அவருக்கும்எனக்கும் ஒருநாளும்காணமுடிந்ததில்லை. அவருடைய முழு வாழ்க்கையிலும் அவர் இயக்கத் தொண்டைத் தவிர வேறு எவ்விதத் தொண்டிலும் ஈடுபட்டதில்லை. அழகிரிசாமியைப் போல் இயக்கத்தில் படித்த, பாமர மக்களுடையவும், இளைஞர்களுடையவும் மனதைக் கவர்ந்து பறிகொண்டவர்கள் அரிது என்றே சொல்லுவேன். அப்படிப்பட்ட ஒருவர், உண்மையான வீரமும் தீரமும் உள்ளவர் இச்சமயத்தில் முடிவெய்திவிட்டது எனக்கு மிகவும் வருத்தத்தைக் கொடுக்கிறது என்பதோடு இயக்கத்துக்கும் பதில் காணமுடியாத பெருங்குறை என்றே சொல்லுவேன்.

—பெரியார் ஈ. வெ. ரா.

டிருந்த ஹிட்லர், தினசரி உழைத்து உழைத்து உருக்குலைந்து கொண்டிருந்த நிலையில், 'நான் இப்படி அவதிப்பட, அவர்கள்மட்டும் எவ்வளவு சொகுசாக வாழ்கிறார்கள். இந்நாட்டின் பரம்பரை மக்களாகிய ஜெர்மானியர் வாழ்வைச் சூறைகொண்டு ஏன் அவர்கள் மட்டும் அப்படி வாழ்கிறார்கள்? நாட்டுக்குச் சொந்தமுடையோர் திண்டாடித் தெருவில் நிற்க யூதர்கள்மட்டும் எப்படி வாழ்வின் போக போக்கியங்களிலே புரண்டுகொண்டிருக்கிறார்கள்? என்னவர் பாரார்! எங்கிருந்தோ வந்தவன் படாடோபி! இது ஏன்?" என்று கேட்டுக் கேட்டு, எண்ணியெண்ணி, விட்ட ஏக்கங்கலந்த பெருமூச்சுகள்தான் பின்னர் கொதிப்பேறிய தணல் கட்டிகளாக மாறிற்று! அந்தப் பெருமூச்சுக் கனல்கள்தான் ஹிட்லர் ஆட்சிப்பீடம் ஏறியதும் யூதர்கள்மீது தீராத வெறுப்பை, ஆறாத குரோதத்தை, ஓயாத கொடுஞ் செயலைப் பொழியச் செய்தது! அவன், அவர்கள் மமதையை நசுக்க, ஒடுக்க எடுத்த நடவடிக்கைகளும் அதைச்சாதிக்க கையாண்ட கொடிய முறைகளும் அனந்தம்!

* * *

ஜெர்மனியில் வாழ்ந்த மக்களில் யூதர்கள் நூற்றுக்கு நால்வர் தான். ஆனால் வக்கீல்களாக இருந்தவர்களிலே யூதர்கள் நூற்றுக்கு 60 பேர், பணப்பெட்டிகளின் பக்கத்தில் பாங்கர் (Banker)களாக இருந்தவர்களிலோ நூற்றுக்கு 72 பேர்! பத்திரிகைத் துறையுள்பட எங்கும் அவர்கள் மயமே! அதனால்தான் ஹிட்லரின் மனதிலே யூதர்கள் என்றாலே அவ்வளவு வெறுப்பு ஏற்பட்டது. மாளிகை ஒரு புறம்—மண்மேடு ஒருபுறம். இரண்டுக்குமிடையே சரிக்கட்ட முடியாத பெருத்த வேற்றுமை. இந்த 'வேற்றுமை தூரம்தான்' ஹிட்லர் மனதில் மாறமுடியாத—மாற்ற முடியாத அளவில் யூதர்கள்மீது பெருங் குரோதத்தை உண்டாக்கிற்று. பொதுவாக ஜெர்மானியர்கள் யூதர்கள்மீது கடுங்குரோதங் கொண்டதற்குக் காரணமே யூதர்கள் தங்களை ஏதோ 'தெய்வீகப்' பிறவிகள் என்று கருதி, 'தாங்கள் தான் ஆண்டவனின் பிரத்தியேகப் படைப்புச் சாதியினர் ஏனையோர் தங்களுக்காக உண்டானவர்' என்றதாக எண்ணிக் கொண்டிருந்ததே தான்! தாங்கள் ஜெர்மானிய மக்களிடமிருந்து பிரிந்து, தனியாக வேறு ஓரிடத்தில் வாழ இடம் அமைத்துக் கொண்டதேதான்! தங்களுக்கும் ஜெர்மானியர்களும் பெருத்த வேற்றுமை — பேதம், தாழ்வு இருப்பதாக எண்ணியது தான்! இந்த எண்ணமே ஜெர்மனியர்கள் யூதர்களிடம் மீளா வெறுப்பைக் கொள்ளுமாறு வழியமைத்தது! ஹிட்லர் யூதர்களின் சுகபோக வாழ்வைச் சிதைத்துக் குலைக்க, மேற்கொண்ட நடவடிக்கைகளை, இழைத்த இன்னல்களை, எழுதவே இயலாது! வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத அளவில் ஹிட்லர் யூதர்களைத் துன்பப்படுத்தினன் என்றால் அதற்குள்ள ஒரே காரணம் இளமையிலிருந்து 'அவர்கள்' சுகவாழ்வையும் 'தன்னவர்' வேதனையையும் கண்டு கண்டு அவன் இதயம் இரும்பாக ஆகிவிட்டதே, அதுதான்!

* * *

"ஏன்டி, அலமு! இன்னிக்கு உங்காத்துலே என்னடீ? எங்காத்துலே வெறுமனே கோதுமை அல்வாவும் கொஞ்சம் ஸ்பெஷல் 'பஜ்ஜி'யும்தான் போட்டேன் டிபனுக்கு............"

"அம்புஜம்! எங்கே, இங்கே வாடீ பார்க்கலாம். இது என்ன பாரு.........நல்லாயிருக்கோ இப் பேசரி, நல்ல காரட்டாம். விலை 1300 சொச்சமாம். எங்காத்துக்காரர் வாங்கிண்டுவந்தார். நோக்கு பிடிச்சிருக்கோடீ?"

"கோமளம் நேர்க்கு இந்த 'பேசரி' நல்லாருக்கடீ! இதைப் பார்த்தியோ...... எங்காத்துக்காரர் எடுத்திண்டுவந்தோர் விலை 300 ரூ. சகிக்கலே......!"

"கமலி! கமலி! மூஞ்சியை அலம்பிட்டு 'டிரஸ்' பண்ணிக் கோடீ....பாட்டு வாத்தியார் வந்திடுவார்!"

* * *

"வீராயீ அக்கா... அட ஒன்னைத்தான்! எம்பிட்டுச் சத்தம் போடுறேன். காதிலே விழல்லே! கொஞ்சம் வெத்திலை சருகு இருந்தாக் கொடேன்!"

"ஏ குட்டி... அஞ்சலை! எங்க போய்ட்டியாம் ஏதாச்சும் கஞ்சித் தண்ணி இருக்கா...இல்லே நேத்து கதிதானா?"

"ஏங்க...இந்த பொங்கலுக்காவது ஒருபழசு கிழசு உண்டுங்களா? நானுந்தேன் பொறந்தேன்...உங்க கிட்டே வந்து முழுசா இருபது வருஷம் ஆச்சு, எண்ணேக்காவது ஒரு 15 ரூ. வாலே ஒரு புது புடவை, ஊம்..."

"அம்மா... அக்கிரகாரத்து அய்யரு மகன் இல்லே அவரு வெந்திருக்காரும்மா, பட்டணத்திலேருந்து! அவர் என்னமோ வச்சு தின்னுரு... மைசூர் பாக்காம்...எனக்குக்கூடக் கொஞ்சம் கடிச்சுக்கொடுத்தாரும்மா...நல்லாயிருந்துச்சு! ஏம்மா எனக்கு அதுபோல செஞ்சுதர மாட்டேங்கிறே....."

* * *

இரண்டு இடங்கள்! அங்கே நடைபெறும் நித்திய நிகழ்ச்சிகளில் சில! ஓரிடத்தில் வைரம்! பட்டு! பாட்டு! டிபனுக்கு அல்வா பேச்சு!

இன்னொரு இடத்தில் கஞ்சி இருக்குமா என்ற சந்தேகத்துடன் எழும்புங்குரல்! புதுப்புடவை கட்டியறியாத அஞ்சலையின் ஓலம்! ஓரிடத்தில் 300 ரூ சில்லறை! இன்னொரு இடத்தில் 15 ரூ கிடைக்காத கவலை!

மைசூர் பாகைக் கடித்துத் தானம் செய்யும் அளவுக்கு மிதமிஞ்சிய நிலை ஓரிடத்தில்! மைசூர் பாகையே கண்டறியாத பையன் இன்னொரிடத்தில்!

**நாடு ஒன்று! வாழ்பவர் ஒரே மக்கள்! ஆனால் வாழ்க்கை ஓரிடத்தில் பூஞ்சோலை! இன்னொரிடத்தில் வெறும் பாலை!...**

வீணுக்குழைத்தோமடா! என்ற வீராசாமியின் வேதனைக் குரல், 'கூழுக் கலைகிறோமே!' என்ற குப்பன் கூக்குரல் ஓரிடத்தில் பிரலாபமாக, ஒப்பாரியாக எழும்பும் நேரத்தில் இன்னொரிடத்தில் 'பேசரி'யும் குலவுதலும் நடக்கிறது!

ஆண்டாண்டுபோன மாண்புடைவேந்தர்களின் மரபிலே வந்தவர் வாழ்விலே வேதனை!

ஒண்ட இடமின்றி, ஓட்டாண்டியாக வந்தவர் வாழ்விலே கோலாகலம்...

இங்கு நாட்டிலே நீடிக்கவே செய்கிறது ஜெர்மனியில் ஜெர்மானியன் திண்டாடிய வேளையில் யூதர்கள் கொட்டமடித்தது போன்ற கொடிய நிலை! அங்கு போலவே இங்கும்! மக்கள் தொகையில் நூற்றுக்கு மூன்றுபேர்...சரியாகக் கூறவேண்டுமே யானால் $2\frac{3}{4}$ பேர்! ஆனால் அவர்கள் வாழ்வு உழைக்காத நிலையில் தளிர்மாவாக இருக்கிறது! அழகு, ஆடம்பரம், கல்வி, இசை எல்லாம் அங்கு.....





பைத்திரிகைகள், வக்கீல்கள், வத்தியர்கள், அரசியல் சூத்திரதாரர்கள், ஆசிரியர்கள் அத்தனை பேரும் அங்கு!

**இது ஏன்!**

இந்த கேள்வி எழும்பியுள்ள காலம் இதுதான்! உல்லாச புரியும்: உழைக்கும் உலகமும் மனிதனின் பிறப்பிலேயே அமைந்து இருக்கிறதே இது ஏன்? என்ற உரை எழுப்பப்பட்டிருக்கும் நேரமும் இதுதான்! மாளிகைக்கும்—மண்குடிசைக்கும் உள்ள தூரம், அவைகள் ஏற்பட்ட காரணம், மக்கள் மன்றத்திலே தென்பட ஆரம்பித்திருக்கும் காலமும் இதுதான்!

வாழ்க்கையின் மாடிப்படி கல்வி. ஆனால் அதன் பக்கலில் நிழலுக்குக்கூட நம்மவர் ஒண்டியதில்லை, ஒண்டும்படி செய்யப்படவில்லை!— இதன் விளைவாக ஏற்பட்ட வேதனைகள் ஒன்றல்ல; ஓராயிரம் கூறலாம்!

நாட்டின் வருமான வாய்க்கால்களான எத்துறையிலும் ஒரு சாரினரே இருக்கின்றனர். எங்கெங்கு நோக்கினும் அங்கெல்லாம் அவர்களே!

எப்படி அவர்கள் அவ்வளவு உயரிய நிலைமை அடைந்தனர்? என்ற கேள்விக்குப் பதில் **"ஏமாந்த காலத்தில் ஏற்றங் கொண்டார்; ஏமாந்தார் மக்கள் அதனால் ஏற்றங்கொண்டார்"** என்பது தவிர வேறில்லை!

ஏமாந்த, எண்ணற்ற மக்கள் தங்கள் நிலைமையில் ஏற்றம் காண வேண்டும் என்ற ஆசையுடன் துயில் நீத்து எழுந்து நிற்கும் பொழுதுதான் ஏமாற்றி வந்தவர்கள் ஜாலேயிட ஆரம்பிக்கின்றனர்! 'வகுப்புத் துவேஷம்' என்ற காரணம் போட்டு மூடி, அறிவு வளர்ச்சியைத் தடுத்து, தங்கள் சுகபோகச் சுரண்டலுக்கு எவ்வித கேடும் சூழாதபடி பார்த்துக் கொள்வதில் கண்ணும் கருத்துமாய் இருந்து அவர்கள் ஓலமிடுகின்றனர்!

பிற்பட்ட வகுப்பினர்களுக்கு, உழைத்தும் வாழத் தெரியாமல் கிடக்கும் மக்களுக்கு, யாராவது, சலுகைகள் ஏதாவது செய்ய ஆரம்பிக்கும் போதெல்லாம் தங்கள் உரிமைகள் கொள்ளை போவதாகக் கூக்குரலிடுகின்றனர்! சாதாரண வகுப்புவாரி முறை—யாவருக்கும் சமசந்தர்ப்பம் கிடைக்கும்படி செய்யப்படும் நோக்கம் கொண்டது! இதற்கு அக்கிரகாரம் அளிக்கும் எதிர்ப்பு, ருக்குமணி லட்சுபதிகள் உருவில்கூட வருகிறது! பிற்பட்ட வகுப்பினர்கள் நலனுக்கு ஒரு கட்சி என்றால் கோபம்; அவர்கள் துயர் போக்க வழி செய்யப்படுகிறதென்றால் சஞ்சலம்; அவர்களில் ஒருவன் நீதிபதியாக வரவிருந்தால் அவனை வரமுடியாமற் செய்ய அட்டகாச நடவடிக்கைகள்.........

அப்பப்ப! இவர்கள், தம் சுரண்டல் வாழ்வு சரியாமல் இருப்பதற்காகச் செய்யும் மாயா ஜாலங்கள் தான் எத்தனை எத்தனை!!

ஜெர்மனியில் ஒரு ஹிட்லர் தோன்றுவதற்குத் தேவையான எத்தகைய சூழ்நிலையை யூதர்கள் சிருஷ்டித்தார்களோ அதே நிலையைத்தான் இங்கே இந்த நாட்டு யூதர்களும் சிருஷ்டித்திருக்கிறார்கள்......அதே ஆணவம், அதே அக்கிரமம், அதே கொடுமை, அதே சுரண்டல், அதே சுகபோகம், அதே உயர்ஜாதி தத்துவம்! அதே ஆண்டவனின் செல்லப்பிள்ளை கொள்கை! அங்கே, ஜெர்மனியில், நாட்டு சொந்தக்காரர்களை சூறையாடி வாழ்ந்தனர் எங்கிருந்தோ பிழைக்க வந்த யூதர்கள்! இங்கேயும் "எங்கிருந்தோ வந்தவர்கள்" இந்நாட்டுக்கு உடையவரைச் சூறையாடி வாழ்கின்றனர். ஆம்! யூதர்கள் இங்கேயும் இருக்கிறார்கள்! ஆனால் ஹிட்லர்தான் இல்லை! பழிக்குப்பழி வாங்க வேண்டும் என்று எண்ணுகிற பாதக நினைப்பு படைத்த பழிகார உள்ளத்தவர்தான் இல்லை! திராவிட சமுதாயத்திலே தம்மைச் சுரண்டி வாழும் "யூதர்"களை ஒழித்துக் கட்டும் ஒரு ஹிட்லர் தோன்றவில்லை என்றால் அதற்குக் காரணம் திராவிடர் கழகம்தான்!

திராவிடர் கழகம்தான், தமிழர் உழைப்பை உறிஞ்சி வாழும் இந்த நாட்டு யூதர்களின் கொடுமையைக் கண்டு உள்ளம் குமுறிக் கொண்டிருக்கும் திராவிட சமுதாயத்தை, சாந்தப்படுத்திய வண்ணம் இருக்கிறது. சுரண்டிவாழும் யூதர்கள் இருக்கிறார்கள் என்றாலும் அவர்கள் மீது சீறிப்பாயும் ஹிட்லர் இல்லை என்றால் அதற்குக் காரணம் திராவிடர் கழகம்தான். இதை யாரும் மறுக்கமுடியாது. கழகம் மட்டும் இல்லாமல் இருந்திருந்தால்,........ அப்பப்பா! இங்குள்ள யூதர்கள் என்ன பாடுபட்டிருப்பார்கள்...... அதை நினைத்துப் பார்க்கவே நம் நெஞ்சு நடுங்குகிறது......ஆனால்... அந்த "யூதர்"களுக்கு...கழகத்தின் மீது நன்றி கொஞ்சமும் காணோமே!...... நன்றியில்லாதது மட்டுமா கழகத்தையே ஒழிக்க அல்லவா பார்க்கிறார்கள் அந்த உதவாக்கரைகள்!......சே! என்ன மதியீனம் அதுகளுக்கு!

---

**(9-ம் பக்கத் தொடர்ச்சி)**

காகவா இப்படி மக்கள் சிரிக்கும்படி நடந்துகொள்வது?

சரி! ஏதோ நடந்தது நடந்து விட்டது! இந்த வருஷத்து பதவிப்பிடி சண்டை பூர்த்தியாகி விட்டது! புதிய பிரதமரையும் தேர்ந்தெடுத்தாகிவிட்டது! அடுத்த மார்ச் மாதம் வரையில் புது முதல்வர் நிம்மதியாக இருக்கலாம்! பொதுமக்களாகிய நமக்கும், இன்னும் ஓராண்டு காலத்திற்கு, அருவருக்கத்தக்க இந்த பதவிவேட்டைக் காட்சியைக் கண்டு நிரவேண்டிய தர்மசங்கடம் இருக்காது! பதவி வேட்டைத் துர்நாற்றம் அந்த தேசபக்தர்களுக்குத் தெரியவில்லை, ஏனெனில் அந்த துர்நாற்றத்தை நுகர்ந்து நுகர்ந்து பழகிவிட்டார்கள் அவர்கள், ஆகவே அதை அவர்கள் மகரந்த வாசனையாகக் கூடக் கருதக்கூடும், ஆனால் நமக்குத்தானே இந்த துர்நாற்றத்தைப் பொறுக்க முடியவில்லை, எனவே இந்த துர்நாற்ற நிகழ்ச்சி இவ்வளவு விரைவில் இத்த ஆண்டைப் பொறுத்தவரை முடிந்தது பற்றி நாம்தான் அதிக மகிழ்ச்சியடைய வேண்டும்!

---

# போர்வாள்

2—4—49 சனிக்கிழமை

# அழகிரியா மறைந்தார்?

## இல்லை!

## இதோ இருக்கிறார்!

கொஞ்சம் தேறியிருக்கிறார்—முகத்திலே சிறிது 'களை' ஏற்பட்டிருக்கிறது — கண்களிலே புதிய, பிரகாசமான ஒளி நிழலாடுகிறது—வார்த்தைகளிலேகூட புதியதோர் இன்பம், நம்பிக்கை, உற்சாகம், ஒருவகைத் தெளிவு தென்படுகிறது—இன்னும் ஒரு சில நாட்கள்தான் அவர் நம்மோடு இருப்பார் என்ற நிலை மாறிவிட்டது—சில மாதங்களாவது இருப்பார் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது என்றெல்லாம் சென்ற சில நாட்களாகவே 'சேதி' வந்துகொண்டிருந்தது, நண்பர் நெடுஞ்செழியன் சென்ற வாரம் 'விடுதலை'யில் வெளியிட்ட அறிக்கையும் இந்த நம்பிக்கையை வளர்ப்பதாகவே இருந்தது, நமது அழகிரியை நாம் இழந்துவிடுவது நிச்சயமாமே, டாக்டர்கள் கைவிட்டுவிட்டார்களாமே, இன்னும் சில நாட்கள்தானாமே என்றெண்ணி எண்ணி ஆயிரமாயிரம் சுயமரியாதைத் தோழர்கள் உகுத்துவந்த கண்ணீரிலே தோய்ந்திருந்த துக்கம் நம்பிக்கையூட்டும் இச் சேதிகளைக் கேட்டு சற்றே குறையலாயிற்று. ஆம்! அழகிரி இருப்பார், இன்னும் சில மாதங்களேனும் இருப்பார், தமிழன் தொடுத்துள்ள போர், அறப்போர், வெற்றிவிழா கொண்டாடும் வரையேனும் இருப்பார், அந்த வெற்றி விழாவை நிச்சயம் அவர் காண்பார் என்றெல்லாம் கொஞ்சம் நம்பிக்கையுடனே பேசிக்கொள்ளலாயினர், ஆனால், அந்தோ! அந்தப் பேச்சு சரியாகக்கூட உச்சரித்துமுடிக்கப்படவில்லை, அதற்குள், "அழகிரி மறைந்துவிட்டார், இனி அவர் வரமாட்டார், இனி வரவே மாட்டார்!" என்ற கொடுஞ்சேதி வந்து புகுந்தது அன்னார் செவியில் எல்லாம். திகைப்புண்டு நின்றுவிட்டனர்! துக்கம் அவர்கள் நெஞ்சைத் துளைக்கலாயிற்று.

அழகிரி மறைந்துவிடுவார் என்பது சென்ற சில நாட்களாகவே, ஏன், சென்ற சில மாதங்களாகவே நாம் எதிர்பார்த்த 'சேதி' தான், ஈரோட்டு மாநாட்டில் அந்த மாவீரன் இருந்த நிலையைக் கண்ட போதே நம் உள்ளம் இப்படிப்பட்ட ஒரு சேதி நம் செவியிலே வந்து விழும் நாள் அதிக தூரத்தில் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டது உண்மைதான், சென்ற சில வாரங்களாக அழகிரி மறைந்து விடுவார், அகிழரி மறைந்துவிடுவார் என்று ஒரு மெல்லிய சிறு ஒலி நம் காதிலே இடைவிடாது ஒலித்துக்கொண்டிருந்ததும் பொய்யல்லதான், எனவே, நாம், நாளையோ மறுநாளோ இந்த மரணச் செய்தி நம் உள்ளத்தை வந்து குடையும் என்பதை நன்கு அறிந்திருந்த காரணத்தால் அதைத் தாங்குவதற்கு வேண்டிய தைரியத்தையும் மனப் பக்குவத்தையும் முன்னதாகவே வரவழைத்துக் கொண்டிருக்கவேண்டும், அதுதான் உண்மை வீரர்கள் என்ற முறையிலே நாம் செய்திருக்க வேண்டிய கடமை என்பதையும் மறுப்பாரில்லை, நாமும் கூட, "எதிர்பார்க்கப்பட்ட சேதி—எனவே இந்த துக்க ஒலி நம் கண்களைச் சந்திக்கும் போது உள்ளம் அவ்வளவாக உடைந்துவிடாது" என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தோம்! ஆனால் மரணச் செய்தி, நம் செவிக்கு எட்டிய போது, நல்ல உடல் கட்டும் நோய் அறியா நிலையும் வாய்ந்த கட்டிளங்காளை ஒருவன் திடும் என இறந்து பட்டால் எத்தகைய நிலையை அடையுமோ அவனருமைத் தோழர்கள் உள்ளம், அத்தகு நிலையைத்தான் நாமும் அடைந்தோம். எதிர்பார்க்கப்பட்டது என்ற காரணத்தால் துக்கம் துளியும் குறையவில்லை—காரணம், அழகிரி நாம் இழக்கவே கூடாத, இழக்கவே முடியாத ஓர் ஜீவசக்தி! என்ன விலை கொடுத்தேனும் நாம் காப்பாற்றியேஇருக்க வேண்டிய அறிவுப் பொக்கிஷம்!

நெட்டையான உருவம், நிமிர்ந்த நடை, கம்பீரமான பார்வை, சிங்க ஏறு போன்றதோற்றம், நெருப்புப் பொறிபறக்கும் கண்கள், கொதிக்கும் தணல் போன்ற வாசகங்கள், ஆனால் குளிர்ச்சிமிகு உள்ளம் இவ்வளவும் படைத்தவர்தான் இன்று நம்மைக் கோவெனக் கதறி அழும் படியான நிலையில் நிறுத்திவிட்டு மறைந்துபோன மாவீரர் அழகிரிசாமி. அழகிரி சாமிக்கு சுயமரியாதை உலகம் சூட்டிய செல்லப் பெயர் அஞ்சா நெஞ்சன் என்பது! அஞ்சா நெஞ்சன் என்றால் அஞ்சா நெஞ்சனேதான் அவர்! மலை குலைந்தாலும் குலையும், கடல் துளங்கினாலும் துளங்கும், ஞாயிறு குளிர்ந்து போனாலும் போகும் ஆனால் அழகிரியின் உள்ளத்தில் மட்டும் அச்சத்தின் நிழலும் நுழைய நடுங்கும். பயம், அவர் அறியாத பொருள்! நடுக்கம், அவருக்குத் தெரியாத வஸ்து! அச்சம்—அப்படி என்றால் என்ன என்று கேட்கும் உள்ளத் திண்மை படைத்தவர் அழகிரி! கொடிய விலங்குகள் ஆயிரமாயிரம் உலவிடும் காட்டிலே, அச்சம் என்பதையே அறியாது, வீர கர்ஜனை புரிந்தவண்ணம், நிமிர்ந்த தலை நிமிர்ந்தபடி, செம்மாந்த நோக்குடன், பீடுநடை நடக்கிறதே சிங்க ஏறு, அதுபோலத்தான் அழகிரி தமிழகத்திலே உலவி வந்தார் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றி! பணமூட்டைகள் பிரசார பீரங்கிகளை ஏவின அவர் மீது! ஆளவந்தார்கள் அக்கினியாஸ்திரங்களை வைத்துக் கொண்டு மிரட்டலாயினர். "பிரம்மணீயம்" பஞ்ச



தந்திர முறைகளையும் கையாண்டு பார்த்தது அந்தப் பாட்டாளித் தலைவனை வசப்படுத்த! வைதீக வல்லரசோ வெடிகுண்டுகளை வீசிற்று அவர்மீது! அவர், பகுத்தறிவுப் பணிபுரியச்சென்றபோது பழமை, ஒவ்வொரு ஊரிலேயும் முறைத்துப் பார்த்தது அம் மாவீரரை! சில ஊர்களிலே. பழமையின் எதிர்ப்பு, கல் வடிவிலே அவர் முகத்தைத் தடவிப் பார்த்தது! சில ஊர்களிலே மண்மாரி அவரை வரவேற்றது! சில இடங்களிலே கல், மண், இரண்டும்! முட்டைகளையும்கட்டைகளையும் அவருக்குப் பரிசளித்த ஊர்களும் உண்டு! "ஒழித்துக்கட்டாமல் விடுவோமா இந்த தகர டப்பாவை" என்று மீசையை முறுக்கிய "பெரிய மனிதர்கள்" பலர்! பலப்பலர்! ஆனால் எதிர்ப்பு, இது போல, கடல் அலையென எழுந்தாலும், அழகிரி, அதன்மீது மிதக்கும் மரக்கலமென, பகுத்தறிவுப் பிரசாரத்தைவிடாது புரிந்துவந்தாரே தவிர எதிர்ப்பு கண்டு அஞ்சினர், அல்லது ஒரு அங்குலமேனும் பின் வாங்கினர் என்று கூறத்தக்க நிகழ்ச்சி ஒன்றுகூட அவர் வாழ்க்கையில் கிடையாது.

இப்போதுபோல், கழகக் கூட்டம் என்று சொன்னால், ஐம்பதாயிரம் அறுபதாயிரம் என்று மக்கள் திரண்டு கூடும் காலம் அல்ல அது! "இன்றைக்கு சுயமரியாதைச் சங்கக்கூட்டம் நடந்தது! அடே அப்பா! எவ்வளவு பேர் தெரியுமா! இவ்வளவு அதிகமான பேர் வருவார்களென்று நான் நினைக்கவே இல்லை"—ஒரு தோழர் கூறுவார், பெருமையோடு! "கூட்டத்திலே எத்தனை பேர் இருக்கும்" —மற்றவர் கேட்பார் மெதுவாக! "எண்ணிப் பார்த்தேன், தோழா! 68 பேர்! பெரிய தொகையில்லைபா! இதற்கு முன்னெல்லாம் நம் கூட்டத்திலே 20 அல்லது 30 பேர்தானே வருவார்கள்! நம் பிரசாரம் பார்த்தாயா நாளுக்குநாள் வலுத்துவருகிறது!" என்று சொல்லிப் பெருமிதமடைவார் முன்னவர். 68, அந்தக் காலத்திலே பெரிய தொகை! சுயமரியாதைக் கூட்டங்கட்கு அறுபது அல்லது எழுபது பேர் வந்துவிட்டால் போதும், வீடு வீடாகச் சென்று, நண்பர்களை, எங்கள் கூட்டத்திற்கு வந்துபாருங்கள் என்று வேண்டி வேண்டி அழைத்த நம கூட்ட அமைப்பாளர்கள் உள்ளம் குளிர்ந்துவிடும்.

அது அத்தகைய காலம்! அத்தகைய காலத்திலேதான், அழகிரி, ஓயாது உழைத்து உழைத்துப் பணியாற்றியிருக்கிறார் என்றால் அவருடைய உள்ளம் எவ்வளவு வயிரம் பாய்ந்ததாக இருக்கவேண்டும் என்பதை நாம் சொல்லவா வேண்டும்! "இன்று நம் கூட்டத்திற்கு 68 பேர் வந்துவிட்டார்களப்பா — எவ்வளவு பெருங்கூட்டம்!" என்று சொன்ன காலம் போய், "நேற்று ஜலந்து கிரவுண்ட் கூட்டம். தொகை 68 000 க்குக் குறையாது" என்று ஒருவர் கூற, மற்றவர், "இது ஒரு பெருந்தொகையா, முன்பு, பெரியார், அண்ணா, தளபதிகள் எல்லோரும் சிறை சென்றார்களே, அன்று மாலை, அறிஞர் திரு. வி. க. தலைமையில் நடைபெற்றதே கூட்டம், அதற்கு இலட்சத்திற்கு மேற்பட்டவர்கள் வந்தார்களே!" என்று மகிழ்ச்சியுடன் கூறும் காலம் வந்திருக்கிறதே, இந்த மகத்தான மாறுதல் ஏற்பட்டதற்கு அழகிரியின் ஓயாத உழைப்பும் சண்டமாருதப் பிரசாரமும் எவ்வளவு பயன்பட்டிருக்கவேண்டும்!

பெரியார் காங்கிரசிலிருந்து விலகி, சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்த அந்தக் காலத்திலிருந்து, மரணம் தன்னைத் தழுவிய கடைசி விநாடி வரையில் அழகிரி, இயக்கப் பணி புரிவதிலிருந்து சிறிதும் விலகியிருந்தாரில்லை. காசநோய் உடலை சித்திரவதை செய்து வந்த காலத்திலும்கூட, அவர் இயக்கக் கூட்டங்களிலும் மாநாடுகளிலும் தாராளமாகக் கலந்துகொண்டிருக்கிறார் என்பது மட்டுமல்ல, பல இடங்களில் மணிக்கணக்கிலே வீர உரை ஆற்றியும் இருக்கிறார், ஆளவந்தார்களின் ஆணவத்திற்கு—வைதீகபுரியினரின் வஞ்சக நினைப்புக்கு—பிரம்மணீயத்தின் பைசாச எண்ணங்கட்கு சரியான சவுக்கடி தந்தும் இருக்கிறார். இயக்கத்திடத்திலே அவருக்கிருந்த தளராத பற்றுதான் காசநோயையும் கவனியாது அரும்பணி ஆற்றத் தூண்டிற்று அவரை. அம் மாவீரர் கை இளைத்து, கால் இளைத்து, உடல் இளைத்து, தலை சாய்த்துப் படுக்கையில் கிடந்த ஞான்றும்கூட, ஈரோட்டில் மாநாடு என்ற கேட்டவுடனே, அந்த நிலையிலேயும் ஓடோடிவந்தார் மாநாட்டிற்கு, உற்சாகத்துடன் கலந்துகொண்டார், இது தான் என்னுடைய இறுதிப் பேச்சாக இருக்கும் என்று கூறினர்—உண்மையும் அதுவாகவே முடிந்துவிட்டது—அழகிரி நம்மைவிட்டுப் பிரிந்து விட்டார்.

பிரிட்டானியத்தை மட்டுமல்ல, பிரம்மணீயத்தை மட்டுமல்ல, முதலாளித்வத்தையும் ஒழித்தே தீருவோம் என்று அடிக்கடி முழக்கமிடுவார் அழகிரி. அவருடைய சொற்பொழிவு ஒவ்வொன்றும் ஒரு வெடிகுண்டாக இருந்து வந்தது வைதீகக் கோட்டைகட்கும் முதலாளித்வ அரண்மனை கட்கும்! அழகிரி பேசுகிறார் என்றால் அந்தப் பேச்சிலே தென்றல் வீசாது; புயல் வீசும்! தேனின் இன்பம் தவழாது! நெருப்பின் அனல் தவழும்! ஆனந்தகீதமாக இருக்காது அவருடைய பேச்சு—புரட்சியின் ஆவேசக் குரல் ஒலியாக இருக்கும்! அவருடைய பேச்சிலே அழகான சொல்லமைப்புகளையோ வார்த்தை அலங்காரங்களையோ அவ்வளவாகக் காணமுடியாது — ஆனால் உள்ளத்திலிருந்து பிறிட்டுக்கொண்டோடி வரும் உணர்ச்சி வெள்ளத்தைக் காணலாம்; கேட்பவர் உள்ளத்தில் நேரே சென்று பாயத்தக்க புரட்சி எண்ணங்களைக் காணலாம்; புதியதோர் உலகு செய்வோம், கெட்ட, போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம் என்னும் அஞ்சாத நெஞ்சத்தின் அசையாத உறுதியைக்காணலாம்; "இது எனது என்னுமோர் கொடுமையைத் தவிர்ப்போம்—பொதுவுடமைக் கொள்கை திசை எட்டும் சேர்ப்போம்" என்றுரைக்கும் தீரத்தை, தீவிரவாதத்தைக் காணலாம்.

அழகிரி பேச ஆரம்பித்துவிட்டால், வார்த்தைகள், தீப்பொறி பறப்பதுபோல, காற்றினிலும் வேகமாக வந்து விழுந்து கொண்டேயிருக்கும். வந்து விழும் ஒவ்வொரு வார்த்தையிலும் புரட்சியின் கனல் தெறிக்கும். தெறிக்கும் அக் கனலிடையேயிருந்து பகுத்தறிவு ஒளி சுடர்வீசித் திகழும். இந்தக் காட்சி அவர்தம் கூட்டுத் தோழர்கள் உள்ளத்திலே அவர்பால் மிகுந்த மதிப்பையும் அன்பையும் எழுப்பும். பகைவர் நெஞ்சிலோ அச்சத்தையும் நடுக்கத்தையும், இனி நம் சுரண்டல் வாழ்வு செல்லாதே என்ற ஏக்கத்தையும் மூட்டும். அனலிடைப்புழு எனத் துடிப்பர் அவர் பேச்சிடை சிக்

90



குண்ட மாற்றுர்! அவர் ஆற்று கின்ற அந்த அரிய சொற்பொழிவு களைக் கேட்டு, அந்த சொற் பொழிவுகளிலே இருக்கும் ஏதோ ஒரு விதை 'பசை'யில் மயங்கி, அவர் வசமாகி, சுயமரியாதைக் காரர்களாக மாறியவர்கள் எண் ணற்றபேர், தமிழகத்தில்! கூர்மை யான ஈட்டிதான் அவர் பேச்சு— ஆனல் அது மாற்றுக் கட்சியின ரைக் குத்திக் குடையாது; அவர் களைச்சுற்றி வளைத்து தன் கூடா ரத்திற்குள் இழுத்துக் கொள்ளும்! அனல் கட்டிகளைத்தான் அள்ளி அள்ளி வீசுவார் அவர் பேசுகிற போது ஆனல் அந்த நெருப்புக் கட்டிகள் தொட்டாரைச் சுட்டி டாது—தொட்டார்தம் உள்ளத்தே உலவும் பழமையை மட்டும்தான் சுட்டுப் பொசுக்கிடும்! சுழன்று சுழன்று வீசும் சண்டமாருதம் தான் அவருடைய சொற்பொழிவு —ஆனல் அந்தச் சண்டமாருதம், மூடநம்பிக்கை என்னும் முன் வேலியை அமைத்துக்கொண்டு, புராண இதிகாசங்கள் என்னும் மதிற்சுவரையும் எழுப்பிக் கொண்டு, நான்குவேதங்கள் எனும் வாயிற்காவலரையும் வைத்துக் கொண்டு, சடங்கு எனும் செங்கோலைக் கையிலும் இந்துமதம் எனும் கிரீடத்தைத் தலையிலும் சூடிக் கொண்டு, சம்பிரதாயம் எனும் கற்கோட்டைக்குள் இருந்து கொண்டு, சமுதாயத்தை ஆட்டிப் படைக்கிறனே வைதீக வேந்தன், அவனைத்தான் பிடித்து உலுக்கும், அவனுடைய கோட்டை கொத்த ளங்களைத்தான் இடித்துத் தகர்க் கும்.

தளபதி அண்ணு அவர்கள் ஒரு முறை குறிப்பிட்டார், சுயமரி யாதை இயக்கத்திலே, 'தலைவர் என்று சொன்னல் பெரியார்தான் தலைவர், அந்தப் பதவிக்கு அவரை விடப் பொருத்தமானவர்கள் வேறு எவரும் இல்லை, மாநாடு ஒன்றை நடத்தவேண்டுமானல் அதனைச் சிறப்பாக முடித்துத் தரவல்லவர் நண்பர் எஸ். வி. லிங்கம்தான்— அந்தப்பணிஆற்ற அவரிலும் பொ ருத்தமானவர் வேறு கிடையாது, அதுபோலவே கூட்டங்களில் சொற்பொழிவு ஆற்ற வேண்டு மானல் அதற்கு ஏற்றவர் அழகிரி தான், அந்தத் துறையிலே அவரை மிஞ்சக் கூடியவர்களை நாம் கண்டு பிடிப்பது அரிதுஎன்று! தமிழகத் தின் தலைசிறந்த பேச்சாளராகிய அண்ணு அவர்கள் இதுபோலக் கூறுகிறர் எனில் அழகிரியின் பேச்சாற்றலைப் பற்றி வேறு ஏதும் கூறுவது மிகை.

* * *

தலைவர் பெரியார் அவர்களிடம் அழகிரிக்கு இருந்த மதிப்பு மட்டற் றது. அவரை அடிக்கடி தமிழகத் தின் சாக்ரடீஸ் என்று பூரிப்போடு புகல்வது அழகிரியின் வழக்கம். "தமிழகத்தை சிந்திக்கவைத்த சீர்திருத்தவாதியல்லவா பெரியார், பெரியார் இல்லையேல் தமிழகத்தில் இன்று ஏற்பட்டுள்ள புத்துணர்ச்சி ஏது? மறுமலர்ச்சி ஏது? சுயமரி யாதை ஆர்வம் ஏது?'' என்று கேட்பார் அம் மாவீரர். பெரியா ரின் போராற்றலை, அவரிடத்திலே இருக்கும் அற்புதமான ஜீவ சக்தியை, அவராலே தமிழகம் பெற்றுள்ள வளத்தை, இனியும் பெற இருக்கும் வாழ்வை, நூற் றுக்கு நூறு பங்கும் உணர்ந்தவர் கள், தமிழகத்தில், சென்ற செவ் வாய்வரை, மூவர் இருந்தார்கள். இப்போதோ இருவர்தான் இருக் கிருர்கள். ஒருவர் — அழகிரி — மறைந்துவிட்டார்!

* * *

**மறைந்துவிட்டார்!**

தன் ஆவேசக் குரலாலே தமி ழகத்தைத் தட்டி எழுப்பிய **அஞ்சா நெஞ்சன் அழகர்சாமி மறைந்துவிட் டார்!**

ஓயாமல் உழைத்து உழைத்து அந்த உழைப்பின் பயனக சுயமரி யாதை இயக்கத்திற்கு ஒப்பற்ற செல்வாக்கைத் தேடித் தந்த **சுய மரியாதைச் சண்டமாருதம் அழகர் சாமி மறைந்துவிட்டார்!**

தன் வாழ்நாள் முழுவதையும் தமிழகத்தின் நலனுக்கே அர்ப் பணித்துவிட்ட காரணத்தால், தன் உடல் நிலையையும் அடியோடு மறந்துவிட்ட **மாவீரர் அழகர்சாமி மறைந்துவிட்டார்!**

சாதாரண ஏழைக் குடும்பத்திலே பிறந்து—ஆனல் பெரிய பெரிய பீரங்கிகளால் எல்லாம் சாதிக்க முடியாத சமுதாயப் புரட்சியை சாதித்த, ஏழைகட்காக அல்லும் பகலும் உழைத்த—ஆனல் கடைசி வரையில் ஏழையாகவே இருந்த **ஏழையர் தோழன் அழகர்சாமி மறைந்துவிட்டார்!**

தியாகத்தின் சின்னம்—அஞ்சா மையின் உருவம்—தமிழ்ப் பண் பாட்டின் வடிவம்—வீரத்திற்கான எடுத்துக்காட்டு— பெரியாரின் பெருந் தொண்டர்—**சுயமரியாதை இயக்கத்தளபதி அழகர்சாமி மறைந்து விட்டார்!**

மறைந்துவிட்டார்!

இனி அவர் திரும்பி வரமாட்டார் வரவே மாட்டார்!

வந்து நமக்கு வாழ்வளிக்கும் எண்ணந்தான் அவர் பால் இல்லை!

ஆம்! அப்படித்தான் சொல்கிறர் கள்!

* * *

மறைந்து விட்டார் என்று சொல்லுகிறர்கள்!

நம் ஆசை அழகிரியையா அப் படிச் சொல்லுகிறர்கள்!

இல்லை, இல்லை! அவர் மறைய வில்லை!

அவர் மறையமாட்டார்!

அவரே விரும்பினலும் அவரால் இனி மறையமுடியாது!

அஞ்சா நெஞ்சன் அழகிரியா மறைந்துவிட்டார்? இல்லை இதோ இருக்கிறர்! நம் உள்ளத்தில் இருக் கிறர்! நம் உள்ளத்தோடு உள்ள மாக இரண்டறக் கலந்திருக்கிறர்! வீணையில் நாதம் போல, மழலையில் இன்பம் போல, தென்றலில் வாசம் போல, செந்தமிழில் வீரம் போல, இதோ, நம் உள்ளத்தில், உணர்ச்சி யில், சொல்லில், எழுத்தில், இயக் கப்பணியில், புரட்சித் தொண்டில் தானே அவையாகி, அவையே தானகி நிறைந்து நிற்கிறர்!

அழகிரி மறைந்துவிட்டாரா? இல்லை இல்லை! ஆயிரமாயிரம் அழ கிரிகள் இதோ இருக்கிறர்கள்! திராவிடர் கழகம் என்னும் புரட் சிக் கொடியின் கீழ் திரள் திரளா கத் திரண்டு நிற்கிறர்கள்!

யார் சொன்னது அழகிரி மறைந்துவிட்டார் என்று? இதோ "விடுதலை'' வடிவிலே இருக்கிறர், "திராவிடநாடு'' உருவிலே இருக்கி றர், "குடி அரசு'' இதழாக இருக்கிறர், "போர்வாள்'' ஏடாக இருக்கிறர், சுயமரியாதை இயக்கமாக இருக்கிறர்; திராவிடர் கழகமாக இருக்கிறர்.

அழகிரி இருக்கிறர் —அவர் மறையவில்லை — மறையமாட்டார் —மறையமுடியாது—

'மறைவு' என்பது அவருக்குக் கிடையாது—மறைவு எனும் மர ணத்தைத் தாண்டிய மாவீரர் அவர்! வாழ்க அழகர்சாமி, வாழ்க!

Best copy available.



# கூவம் மாளிகையில் பூகம்பம்!

அரசியல் ஆருடக்காரர்கள் எதிர்பார்த்தபடியே சென்ற வாரம் சென்னை கூவம் மாளிகையில் பூகம்பம் ஏற்பட்டு, ஓமந்தூரார் மந்திரிசபை என்னும் கட்டிடம், கட்டி முடிக்கப்பட்டு இரண்டு ஆண்டுகள்கூட முடியவில்லை என்றபோதிலும், அதற்குள்ளாக, சடசடவெனச் சரிந்து விழ்ந்து விட்டது. புதிய பிரதமர் புதுமந்திரி சபை என்னும் மாளிகையை உரு வாக்கிக் கொண்டிருக்கிறர்— பழைய பிரதமர் பதவிப் போட்டியி லிருந்து கண்ணியமாக விலகிவிட் டார்.

கூவம் மாளிகையில் காங்கிரஸ் கட்சியினர் குடி புகுந்தபிறகு இது போல ஆண்டுதோறும் அங்கே பதவிப்போட்டி எனும் பூகம்பம் ஏற்பட்டு, இருக்கும் மந்திரிசபை கவிழ்ந்து புது மந்திரிசபை ஏற்படு வது சர்வ சாதாரண நிகழ்ச்சியாகி விட்டது. முன்பெல்லாம் ஒரு மந் திரிசபை உருவாகுமானல் குறைந் தது ஐந்தாண்டுகாலம் அது ஆட்சிப் பீடத்தில் இருக்கும்—இடை இடை யே இதுபோல 'பதவிபிடி சண்டை' கடைபெருது. ஆனல் இப்போதோ ஒவ்வொரு மார்ச் மாதமும் ஒரு புதிய மந்திரிசபை உருவாகிறது— காரணம், முன்னளில் அமைச்சர் களாக இருந்தவர்கள் ஜஸ்டிஸ் கட்சியினர்! அதாவது தேசத் துரோகிகள்! இப்போது ஆளவந் தார்களாக ஆகும் உரிமை படைத் திருப்பவர்களோ பாரத புத்திரர் கள்! ஆம்! தேசோத்தாரகர்கள்! இவர்களுக்குத்தான் பதவி ஆசை என்பதே கிடையாதே—எனவே தான் ஒவ்வொரு எம்.எல்.ஏ-வும் ஒரு மந்திரியாகவேண்டும் என்றும், ஒவ்வொரு மந்திரியும் ஒரு பிரதம ராகிவிட வேண்டும் என்றும் ஆசைப்படுகிறர்கள்!

இந்த தேசபக்தர்கள் ஆளவந் தார்களாக வந்து மூன்று ஆண்டு கள்கூட முடியவில்லை! அதற்குள் நான்கு மந்திரிசபைகளை அமைத்து விட்டார்கள்! முதலிலே பிரகாசம் மந்திரிசபை! பிறகு சுப்பராயன்— ஓமந்தூரார் கூட்டு மந்திரிசபை! அப்புறம் ஓமந்தூராரின் தனி மந்திரிசபை! இப்போதோ மீண் டும் புதியதோர் மந்திரிசபை! இப் படி ஆண்டுக்கு ஒருமுறை பிரதம மந்திரி பதவிக்காக காங்கிரஸ்காரர் கள் கடும்போர் இடுவதுகண்டு நாடு கைகொட்டி நகைக்கிறது! ஆனல் இந்த நல்லறிவாளர் களுக்கோ அதுபற்றி வெட்கமோ துக்கமோ வேதனையோ வருத் தமோ துளியும் காணும்!

ஒரு சாதாரண பிரதமர் பதவிக் காக காங்கிரஸ் எம். எல். ஏ-க் களுக்குள் எத்தனை கோஷ்டிகள்! காமராஜர் கோஷ்டி ஒன்று, பிரகா சம் கோஷ்டி ஒன்று, சுப்பராயன் கோஷ்டி ஒன்று, வைத்தியநாதய் யர் கோஷ்டி ஒன்று, காளா வெங் கட்ராவ் கோஷ்டி ஒன்று, ஓமந்தூ ரார் கோஷ்டி ஒன்று, புரபசர் ரங்கா கோஷ்டி ஒன்று, கோபால ரெட்டி கோஷ்டி ஒன்று, எந்தக் கோஷ்டியிலும் சேராத 20 எம். எல். ஏக்களின் சுயேச்சைக் கோஷ்டி ஒன்று! நாடாள்வதற்கு எந்த நல்ல திட்டம் தேவை என் பதிலே உள்ள அபிப்பிராய பேதத் தின் காரணமாக அல்ல இத்தனை கோஷ்டிகள் அமைந்திருப்பது —அந்தப் பாப காரியத்தில் ஏன் இப் "புண்யாத்மாக்கள்'' ஈடுபடப் போகிறர்கள்—இவர்கள் கோஷ்டி களை அமைத்துக்கொண்டு குஸ்திச் சண்டையில் ஈடுபட்டிருப்பது ஒரு அற்ப பதவிக்காக! பிரதமர் நாற் காலி யாருக்குச் சொந்தம் என் பதை நிர்ணயிப்பதற்காக! இந்த இலட்சணத்தில் இவர்களுக்கு ஆகஸ்டு தியாகிகள் என்று பட்டம் வேறு இருக்கிறது! அந்தப் பட்டத் திற்கு ஏற்ற பட்டா வேறு இருக்கி றது—5 ஏகர் நிலம்! தியாகிகளாம் இவர்கள்! நாட்டின் முன்னேற்றத் திற்காக தங்கள் சொத்து சுகம் யாவற்றையும் துறந்தவர்களாம்! எனவேதான் போலும் இந்த மந்திரி பதவிக்காக இப்படி மல்யுத் தம் நிகழ்த்துகிறர்கள்! செச்சே! இவர்களுக்கென்ன வெட்கம் மானம் ரோஷம் என்பதே கிடை யாதா? கேவலம் மந்திரி பதவிக்

(5-ம் பக்கம் பார்க்க)

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

கிட்டபடி செய்யாவிட்டா, லோகநாதசாமி சும்மா விடமாட்டார்! தெரியுமா?''

எல்லோரும்: தெரியும் தெரியும்: சாமிக்குச் செய்யாமெ, நாம் சம்பாதிக்கிறதுதான் என்னத்துக்கு?

பூசாரி: சரி ஊருக்குப் போவோம்! புறப்படுங்கள்.

(எல்லோரும் மலைக்கோயிலை விட்டு மாலூருக்குப் புறப்பட்டுப் போகின்றனர். சிறிது நேரங்கழித்துக் கோபுரத்திலிருந்து ''தந்திரா'' இறங்கி, சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, மலையின் எதிர்ப்பக்கச் சரிவில் இறங்கிப் போகின்ருன்)

## காட்சி 5.

இடம் :—மாலூரை யடுத்த மலைமீதுள்ள லோகநாதன் கோவில்.

காலம் :—முன் இரவு.

கோவில் பூசாரி மசச்காளியும், ஊராளி, உதயணன், பெத்தியணன், செட்டியப்பன், பச்சையணன், கறுப்பணன், பாவாயி, கருப்பாயி, செம்மாயி, செல்லாத்தா முதலான மாலூர் வாழ் மக்களும் தேங்காய், பழம், கற்கண்டு, இளநீர், பால், தேன், பச்சைமா முதலிய பிரசாதப் பொருள்களைத் தட்டுகளில் வைத்துக்கொண்டு, லோகநாத சாமியின் வரவை எதிர்பார்த்துக் கோவில் வாசலில் நிற்கின்றனர். சிலர் ஸ்துதி பாடுகின்றனர்.

ஆர்யா, சார்யா, இந்திரா, தந்திரா முதலான பூதேவர்கள் ஒன்பது பெயரும் மலையின் எதிர்ச் சரிவிலிருந்து வந்து, கோவிலின் வடபுறமுள்ள திருக்குளத்தின் கரையில், மேல் படியில் ஆர்யாவும், அதற்கடுத்தபடியில் மற்றவர்களுமாக உட்கார்ந்திருக்கின்றனர்!

மாலை 6-மணி முதலே வழிபடு கீதங்கள் பாடிக்கொண்டும், பிரார்த்தனைகள் செய்துகொண்டுமிருந்த மாலூர் மக்கள் மணி எட்டாகியும் மறைந்த கடவுள்கள் மீண்டும் வராததுகண்டு ஏக்கப்படுகின்றனர். அப்போது கோவிலின் வடபாலிலுள்ள குளத்திலிருந்து 'டபார்' என்று பெருஞ் சப்தம் கேட்கிறது. அனைவரும் திடுக்கிடுகின்றனர். சப்தம் வந்த பக்கம் நோக்கி மெதுவாக தீவர்த்திகளுடன் எச்சரிக்கை செய்துகொண்டு செல்கின்றனர். இருட்டில் குளப்படிகளில் உட்கார்ந்திருக்கும் ஆர்யா முதலியவர்கள், தங்களை நோக்கிப் பக்த கூட்டம் வருவதைக் கவனித்தும், கவனிக்காதவர்கள் போல், தங்களுக்குள் உரையாடிக் கொண்டிருக்கின்றனர்.

எதிர்பாராதவிதமாய்க் குளப்படிகளில் சில ஆசாமிகள் உட்கார்ந்திருப்பதையும், தாங்கள் இவ்வளவு பேர், தீவர்த்திகளுடன் கூட்டமாய் வருவதைக் கவனிக்காமலே, அவர்கள் தங்களுக்குள் உரையாடிக் கொண்டிருப்பதையும் கண்டு, அச்சமும் ஆச்சரியமும் கொண்டு, குளக் கரையிலே நின்று அவர்கள் என்ன பேசிக் கொள்ளுகிருர்கள் என்பதை மாலூர் வாசிகள் கவனிக்கிருர்கள்.

சார்யா: தேவ தேவரே! நம் சுயருபத்தைவிட்டு, மானிட ரூபத்தில்தான் இந்தப் பூலோகத்திலிருக்கும்போது நாம் காட்சியளிக்க வேண்டுமாயினும், இந்தப் பிச்சைக்காரக் கோலத்திலா இருக்க வேண்டும்! தாங்கள் நினைத்தால் என்ன கிடையாது?

ஆர்யா: தேவநாதா! நீ கூட வெளிவேஷத்தில் மயங்கி விட்டாயே! நமக்கு எதற்காக ஆடம்பரம்? ஆடையாபரணங்களாலும், உடல் அழகாலும் பெருமைபெற நினைப்பது அற்ப மானிடர் இயற்கையல்லவோ? சுத்தப் பரப் பிரமங்களாகிய தேவர்களுக்கு.. ......

இதற்குள் பக்த கூட்டம் பரவசமடைந்து குளக்கரையின் முதற்படிக்குவந்து ஆரவாரஞ் செய்து தேவர்களைக் கோயிலுக்கு எழுந்தருளும்படி பலவாறு வேண்டுகின்றனர். பூசாரி, ஆர்யாவின்முன் வந்து அடிபணிந்து, ''தேவ தேவரே! லோகநாதரே! இன்னும் எங்கள்மேற் கோபமா? தேவலோகம் போய்த் திரும்பி வருவதாகச் சொன்ன நாள் இன்றல்லவோ?''

ஆர்யா, ஒன்றுமறியாதவன் போல் பாசாங்கு செய்து, ''அப்பா பூசாரி, எங்களைத் தேவர்களென்று யார் சொன்னர்கள்?''

பூசாரி: நான்தான் சொல்லுகிறேன். மூன்று நாட்களுக்கு முன் எங்கள் கோயிலில் இருந்த ஒன்பது தேவர்களும் (சிலைகளும்) பீடங்களிலிருந்து போய் விட்டார்கள். அப்புறம், நான் பக்தியோடு வேண்டிக் கொண்டதன் மேல், லோகநாதர் தம் பரிவாரங்களுடன் தேவேந்திரனுக்குத் தரிசனம் கொடுக்கப் போயிருப்பதாகவும் இன்று இரவு யதாஸ்தானம் வந்து சேர்வதாகவும் கோவிலில் அசரீரி சொன்னது! இப்போது நாங்கள் குளத்துக்குப் பக்கமாக வரும்போது தாங்கள் ஒன்பது பேரும் தண்ணீரிலிருந்து எழும்பி வருவதைப் பார்த்தேன். தாங்கள் லோகநாதசாமிதான் என்பதில் சந்தேகமேயில்லை!

மாலூர்மக்கள்: நாங்களும் பார்த்தோம், ஸ்வாமிகள் குளத்திலிருந்து எழும்பி வந்ததை.

ஆரியா: அப்பனே, பூசாரியய்யா, நாங்கள் சாதாரண பிச்சைக்காரர்கள்! தேவர்கள் அல்ல!

பூசாரி: நாங்கள் நம்பவே மாட்டோம்! தாங்கள் லோகநாதரே! பக்தர்களைச் சோதிக்கும் பொருட்டு எடுத்துக்கொண்ட அருள்வேடமாகும், தங்களுடைய பிச்சைக்காரக்கோலம்!

பச்சையண்ணன்: டே உதயணு பார்த்தாயா, அந்தப் பொத்தலுக்குள்ளே என்ன மின்னுதுண்ணு! மேலேதான் கந்தல், உள்ளே இந்திரவர்ணப் பட்டுடா!

ஆர்யா: அன்பர்களே! இனி தப்பும் வழியில்லை! சென்ற மூன்று நாட்களாக நீங்கள் செய்துவந்த தியானத்திற்கும், பக்திக்கும் மெச்சினேம்! மனித வடிவில் உங்களால் பார்க்கப் பட்டபின் என்மனம் இறுகிக் கல்வடிவாக மாற மறுக்கிறது. என்னிடம் ஒப்பற்ற அன்புடைய உங்களுடன் நாமும் மனித வடிவிலேயே சிறிது காலம் தங்க நினைக்கிறேம். ஆகையால் இந்த அருட்கோலத்திலேயே கோயில் கொண்டருள்வோம்.

பூசாரி: ஆனந்த பரவசனுகிப் பாதபூசை செய்கிருன். மக்கள் லோகநாதன் துதி பாடுகின்றனர். பூசை முடிந்ததும், பூதேவர் ஒன்பது பெயரும் கோவிலுக்குள் அழைத்துச் செல்லப்படுகின்றனர். அங்கே மகா மண்டபத்தில், ஆர்யா ஓர் உயர்ந்த பீடத்திலும் மற்ற எண்மரும் கீழ்பீடங்களிலும் அமர்ந்து கொள்ளுகின்றனர்.

பக்தர்கள் தாங்கள் கொண்டு வந்த பலவகைப் பழவகைகளையும் பானவகைகளையும், 'பூதேவர்' திருமுன்வைத்து ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுகின்றனர்.

ஆர்யா விருப்பு வெறுப்பு ஒன்



றும் காட்டாமல் பதுமைபோல் இருக்கிருன். மற்ற தேவர்களோ பசியின் கொடுமையைச் சகியாதவர்களாய், உருசியான தின்பண்டங்களைக்கண்டு உவகை கொண்டு முகமலர்ந்து இன்புற்றிருக்கின்றனர்.

ஒருபுறமாக, ஒரு பெண், அடுப்பை மூட்டிப் பொங்கல் தயாரிக்கிருள்.

மற்றொரு புறம், இரு ஆண்கள் ஒரு ஆட்டைப்பலியிட்டு, நெருப்பை வளர்த்து, அதில் ஆட்டிறைச்சியைப் பக்குவப்படுத்துகின்றனர்.

முன்னல் வைத்திருக்கும் தட்டுகளில் உள்ள உருசியான பதார்த்தங்களையும், பொங்கல் தயாராவதையும், ஆட்டிறைச்சி பக்குவமாவதையும் பார்க்கப் பார்க்க பூதேவர்களுக்குப்பசி அதிகரிக்கிறது, நா ஊறுகிறது. ஒரு பூதேவன், தன் பக்கத்திலிருந்த தட்டிலிருந்து தினைமா உருண்டையொன்றை யெடுக்கக் கையை நீட்டுகிருன். இவனை ஆர்யா கவனித்து வெறுப்பும் கோபமும் கொண்டு கடிந்து பார்க்கிருன். அந்தப் பார்வைக்கஞ்சி அந்த பூதேவன் நீட்டிய கையை மீட்டுக் கொண்டு காலை ஏதோ கடித்துவிட்டதுபோலத் துடைத்துக்கொள்ளுகிருன். மற்றொரு பூதேவன், ஒரு தட்டிலிருந்த தேனில் ஈக்கள் நிறைய மொய்த்திருப்பதைப் பார்த்துச் சகியாமல் அந்த ஈக்களை ஓச்சுகிருன். இந்தப் பூதேவன் மீதும் ஆர்யாவின் வெறுப்பான பார்வை பாய்கிறது. வேருெரு பூதேவன், இறைச்சி வாட்டப்படுவதைப்பார்த்துக்கொண்டிருந்தவன் ஒரு பக்கம் தீப்படாதிருப்பதைக் கவனித்து, ''டேய் தம்பி! அங்கே பார், பின்னங்கால் துடைப்பக்கம் தீ தாவவேஇல்லையே, சரியாக வாட்டுங்கள்!'' என்று எச்சில் ஒழுக ஒழுகச் சொல்லுகிருன். இதைக்கேட்டதும் ஆர்யா மிகுந்த கோபமும் வருத்தமும் அடைகிருன். ஆனல் ஒன்றும் பேசவில்லை. அப்போது பூசாரி வந்து,

''தேவர்களே, புத்தமுது தயாராகச் சிறிது நேரமாகுமே! முதலில் இத்தட்டுகளில் உள்ள நிவேத்தியங்களை அமுது செய்தருளுங்கள். தாங்கள் தேவலோகத்தில் சாப்பிட்ட பிறகு இன்னும் சாப்பிடாமல்தானே இருக்கிறீர்கள்'' என்று வேண்டுகிருன்.

ஆர்யா: ''தேவர்களே, பக்தர்களின் இஷ்டப் பூர்த்திக்காகச் சிறிது அமுது செய்யுங்கள். தட்டுகளில் உள்ள பணியார வகைகளையும் பானவகைகளையும் அருந்துங்கள்,'' என்று சொன்னதுதான் தாமதம், பூதேவர்கள் எட்டுப் பேரும், காய்ந்தமாடு கம்பங்காட்டில் புகுந்தது போலத் தட்டுகளில் இருந்த பொருள்களைத் துவம்ஸம் செய்ய ஆரம்பித்து விட்டனர். ஆர்யாமட்டும் தான் இருந்த இடம் விட்டுப் பெயராமலும் வாய்திறவாமலும் பார்த்துக் கொண்டிருக்கிருன். பூசாரி எவ்வளவோ வேண்டிக்கொண்டும் ஆர்யா அசைவற்று மௌனஞ்சாதித்திருக்கிருன். ஒரு மூச்சு நன்ருகத் தின்றுவிட்டு, சார்யா எழுந்து, ''உலகத்திற்கெல்லாம் படியளக்கும் உலகநாதன், தான் உண்பது கிடையாது. எல்லா ஜீவராசிகளும் உண்டு திருப்தியடைவதே உலகநாதன் உண்டமாதிரி!'' என்று பூசாரிக்குச்சமாதானம் சொல்லுகிருன். பொங்கல் சமைந்து முடிந்ததும், புத்தமுதும் சூட்டிறைச்சியும் தட்டுகளில் படைக்கப்படுகிறது. பூதேவர்கள் அவற்றையும் ஒருகை பார்க்கிருர்கள்.

இரவு மணி பத்தாகிவிட்டது. பக்தர்களும் லோகநாதரிடம் விடைபெற்றுக்கொண்டு ஊருக்குத் திரும்புகின்றனர்.

எல்லாரும் சென்ற சிறிது நேரங் கழித்து ஆர்யா, ''சாரி! நீயும் இன்று ரொம்ப அவசரப்பட்டு விட்டாய். ஆக்கப் பொறுத்தாலும் ஆறப்பொருத உங்களை வைத்துக் கொண்டு நம் தேவ மரியாதையைக் காப்பாற்றுவது எனக்குக் கஷ்டமாகத்தானிருக்கிறது.''

பூதேவர்கள்: குருதேவ், மன்னிக்கவேண்டும். பசியின் கொடுமையை எங்களால் சகிக்க முடியவில்லை.

ஆர்யா: சரி, சரி: இனிமேலாவது சற்று நிதானமாக என் குறிப்பறிந்து நடவுங்கள். சாரி! நீ போய் நம் திருமாளிகையைக் கபாடபந்தனம் செய்துவா.

சார்யா போய் வாயிற் கதவுகளையெல்லாம் மூடித் தாளிட்டு வருகிருன்.

ஆர்யா: சாரி, எதிராக உள்ள முன் வாசற் பெரிய கதவில் ஒரு பெரிய துவாரம் (திறவுகோலுக்காக) இருக்கிறது. நீ அங்கே போய் நின்றுகொண்டு அத் துவாரத்தின் வழியாக வெளியில் யாராவது வருகிருர்களா என்று கவனித்துக் கொண்டிரு.

சார்யா. அப்படியே செய்கிறேன் குருதேவா! தாங்கள் சிறிது போஜனம் செய்தருளுங்கள்.

''பூதேவர்''களின் முதல்நாள் வாழ்க்கை இவ்வண்ணம் அவர்களுக்கு முழு மகிழ்ச்சி தருவதாக அமைந்தது. உழைக்காமல் உண்பதற்கான இந்த அற்புதமான திட்டத்தை வகுத்துக்கொடுத்த தங்கள் தலைவன் 'ஆர்யா'வை அவர்கள் 'ஆர்யகுல ரக்ஷகன்' என்றே கருதிப் போற்றிப் புகழலாயினர். மாலூர் மக்களும் இவர்களை தங்கள் பிரார்த்தனைக்கு மனமிரங்கி பூலோகத்திற்கு வந்திருக்கும் தேவாதி தேவர்கள் என்றே உறுதியாக நம்பிவிட்டனர். யார் என்ன சொன்னலும் அவர்களின் நம்பிக்கை அசைக்க முடியாததாய் இருந்தது, முற்றத் துறந்த முனிவர்களாலும் காணற்கரிய முழுமுதற் பொருளையும் 'குட்டித் தேவதைகளையும் தாங்கள் தங்கள் ஊனக் கண்களாலேயே, இந்த உலகத்திலேயே, நேருக்கு நேராகவே, காணும் பேறு பெற்றது தங்கள் பூர்வ புண்ணிய பலனே என்றெண்ணி மகிழ்ச்சிக் கடலில் நீந்தித்திளைத்தனர் மாலூர் மக்கள். ஆர்யாவைத் தவிர்த்த, ஏனைய பூதேவர்கள் அனைவரும், ''மேனி மெருகு குலையாமல், குனியாமல் நிமிராமல், சிறு உழைப்பும் புரியாமல், வயிருர உண்டு களிப்பதற்கான ஆர்யமார்க்கம் கண்டுவிட்டோம்—இனி நமக்கு ஆநந்தம் ஆநந்தம் பரமானந்தமே'' என்று பரவசபாணியில் பண்பாடலாயினர். ஆனல், இந்த மோசடி வாழ்வு இன்னும் எத்தனை நாள் என்ற கேள்வி, ஆர்யா மனதை மட்டும் சதா தாக்கிக்கொண்டேயிருந்தது—அந்த ''ஆரியர் குழு''வில் அவன் ஒருவனே கூர்த்த மதி படைத்தவன் ஆதலால்! இந்த மாலூர் மக்கள் தங்களை பூதேவர்கள் என்றே உறுதியாக நம்பி விட்டனர் என்றபோதிலும் இந்த நம்பிக்கை நாளடைவில் தேய்ந்து போகவும் கூடுமே, நம்பிக்கை தேயுமானல், அறிவு ஒளி மாலூரிலே சிறிது பரவுமானல், மாலூர் மக்களிலே தன்னைப் போன்ற கூர்த்த மதியினர் இரண்டொருவரேனும் தோன்றிவிட்டால், பிறகு தங்கள் பாடு திண்டாட்டமாகுமே என்பதை எண்ணிப் பார்த்தான்—ஆர்யா—எனவேதான் அவன் சித்தத்தில் சஞ்சலம் பிறந்தது!

(தொடரும்)

# அழகிரி—சில குறிப்புகள்!

## பெரியாரைப் பற்றி அழகிரி

மேனாட்டில் அன்று பிறந்து வளர்ந்த சாக்ரட்டீஸ் என்ற ஓர் அறிஞரைப் பற்றிக் கேட்டோம். ஆனால் கண்டோமில்லை. இவ்விந்தியாவிலேயே அங்ஙனம் கண்டதாகக் கூறுவாருமில்லை.

எனினும் இத் தமிழ் நாட்டில், இன்று அரும்பெரும் செயலாற்றும் ஒரு சாக்ரடீசைக் கண்டோம். தாடியோடு கண்டோம். அவர் தான் நம் ஈ. வெ. ராமசாமிப் பெரியார்.

அவரால் காணப்பட்ட நம் இயக்கமும் அவ் வியக்கத்தின் அழுத்தமான கொள்கைகளும் தான், நான் தன் மதிப்போடு விளங்குவதற்கு முதற் காரணம் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

## தன்னைப் பற்றி அழகிரி

என்னைப்பற்றித் தோழர்கள் பேசியதில் அடிக்கடி கொள்கை மாறுவது என்ற பழக்கம் என்னை எட்டிப் பார்க்கவில்லை என்றனர். உண்மைதான். இதற்கிடையில் எனக்கு ஒரு ஐயம். அதாவது கொள்கை மாறுவது எதற்கு என்பதுதான்.

வெல்லத்தைவிட்டு வேம்பை சுவைப்பதா? அமுதத்தைவிட்டு நஞ்சைக்குடிப்பதா? இம்மாதிரி செய்வோர் பைத்தியக்கார முட்டாள்களல்லவா? அப்படிப்பட்டவர்கள் தான் சு. ம. இயக்கத்தைவிட்டு விலகிப் பிற இயக்கங்கட்கு மாறுவார்கள்.

ஆனால் நான் அப்படிப்பட்டவன் அல்லன். எனவே என் அகராதியில் மாற்றம் என்பதும் இல்லை. நான் அவ்வாறு வேறு கட்சிகட்கு மாறிய பல தோழர்களின் உள்ளங்களை நன்கு அலசிப் பார்த்திருக்கிறேன்.

பரிதாபம்! அவர்களெல்லாம் ஒவ்வொரு தன்னலத்தைக்கருதியே மாறி ... மாறியும்பயனடையாமல் தவிக்கின்றனர் என்பதை நன்குக உணர்கிறேன். ஆனால் அவர்களெல்லாரும், "அன்று பிரிந்தோம், இன்று கூடினோம், இனி இக்கொள்கையிலேயே இருப்போம்" என்று கூறிக்கொண்டு நம்மோடு வரக்கூடிய நாள் அதிக தூரத்திலில்லை என்பதையும் எடுத்துக்காட்டுகிறேன்.

[1938ல்பேசியது]

## அழகிரி பற்றி அண்ணா

ஈரோட்டு மாநாட்டில் அழகிரி வந்திருக்கிறாரா — அழகிரி வந்துவிட்டாரா?—என்று ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டிருந்த மக்களின் மனம் உருகிவிட்டது, எலும்புந் தோலுமாக, நிற்கவும் சக்தியற்ற நிலையிலே, அந்த அஞ்சாநெஞ்சன் பேச எழுந்ததும்! ஒலி பெருக்கியின் முன்பு அவர் நின்று பேசும் காட்சியே ஒரு படைத் தலைவன், கோட்டை மேல் முகப்பில் நின்று கொண்டு கீழே அணிவகுத்து நிற்கும் படைகளுக்கு, வீர உரை கூறும், பாணியாக இருக்கும். அப்படிப்பட்ட அழகிரி, அன்று, இரண்டு நிமிஷங்களுக்குமேல் நிற்க முடியவில்லை—கால் உதற, கரம் உதற, குரலில் துக்கம் கப்பிக் கொள்ள, நின்றார்—பேசலானார், பிறகு, நிற்கவே முடியாத நிலையில், மேடைமீது உட்கார்ந்துகொண்டார். அழகிரியை இந்தக் கோலத்திலா நாம் காணவேண்டும்! ஏன் உடல் துரும்பாகிவிட்டது—இந்நிலை இவருக்கு இருப்பதுபற்றி நமக்கு இது நாள்வரை தெரியாதே! என்று எண்ணி ஏங்கிய மக்களை, அழகிரி அழவே வைத்துவிட்டார், தமது பேச்சினால்.

"தோழர்களே! இந்த மாநாட்டுக்குப் பிறகு சிறை செல்ல வேண்டி நேரிடும், எனவே அவ்வகையில் இது கடைசி மாநாடு என்றெல்லாம் பத்திரிகையிலே பார்த்தேன். என்னைப் பொறுத்தவரையில், என் உடல் நிலையைக் கவனித்தால், எனக்கு இதுவே கடைசி மாநாடாக இருக்குமோ என்று அஞ்சுகிறேன். என் தலைவனுக்கு என் இறுதி வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளவே, இன்று வந்தேன்" என்றார், தாங்கொணாத் துயரம் தாக்கிற்று, கூடியிருந்த அனைவரையும். தன் நிலை கண்டு மக்கள் தத்தளிப்பது அறிந்து, "என் உடல் நிலை மிகவும் மோசமாகி இருக்கிறது — நோயினால் —படுத்த படுக்கையாக இருந்து வந்தேன்— இனி, என் உடல் தேறும் வரையில் இயக்கப் பணி புரிவதிலிருந்து விலகித்தான் இருந்தாக வேண்டும்" என்று கூறிவிட்டு, அந்த மெலிந்து நலிவுற்ற நிலையிலும், வீரத்தைச் சற்றுவது விட்டுக் கொடுப்பவனல்ல நான் என்பதை விளக்கும் விதத்திலே, இன்றைய ஆட்சிப் போக்கைக் கண்டித்துப் பேசினார்; அன்னை நாகம்மையாரின் அருங் குணத்தை விவரித்துப் பேசும் போது; அவர் மனதிலே, "இந்த நலிவுற்ற நிலையில், என் அன்னை இருந்தால் எவ்வளவு நலமாக இருக்கும்" என்ற எண்ணம் ஊசலாடிக் கொண்டிருந்தது நன்கு விளங்கிற்று. அவர் சொல், காதிலே வீழ்ந்ததே தவிர, விளக்கமாக மக்களுக்கு அதனைப் புரிந்து கொள்ள முடியவில்லை — சொல்லிலே விளக்க முறை இல்லாததால் அல்ல—மக்களின் சிந்தனை எல்லாம், அவருடைய நிலையைப் பற்றியதாகவே இருந்துவிட்ட காரணத்தால்!

அறப்போரிலே, நண்பர் அழகிரி தலைவருடன் சிறை புகுந்தபோதே அவருடைய உடல் நலம் கெட்டிருந்தது—ஓயாத இருமலால் தாக்குண்டு கிடந்தார். அவருடைய நிலை கண்டு, பதறினர் மக்கள்— அவருடைய கண்களிலேயோ, அந்த மாபெருங் கூட்டத்தைக் கண்டதும் ஓர் பூரிப்பு! இருக்கத் தானே செய்யும்! தலைவருடன், நாலைந்து பேர்களில் ஒருவராக, நாடு சுற்றி, புரட்சி நாதத்தைக் கிளப்பி, கல்லடியும் சொல்லடியும் பட்டவரல்லவா! இந்த விதண்டாவாதிகளுடன் யார் சேரமுடியும்! —என்று பொதுமக்கள் பேசியதை, ஏசியதைக் கேட்டுக் கலங்காமல் பணி புரிந்தவர். சில நூறு பேர் கூடுவதும் கஷ்டம் என்ற அளவிலே துவக்கப்பட்ட சுயமரியாதை இயக்கம், இன்று அரை இலட்சம் பேர் கொண்ட மாநாட்டினை நடத்தக் கண்டால், அவர் உள்ளம் பூரிக்காமலிருக்க முடியுமா! வெற்றி! வெற்றி: என்று அவர் செவியிலே காலம் ஒலித்தது —அவர் நிலையைக் கண்ட மக்கள், வெற்றிபெற்றுத் தந்த வீரனுக்கா இந்நிலை — வேதனை — வேதனை— என்று மெள்ளக் கூறினர், சோகத்துடன்.

———

Edited, Printed and Published by P. C. Manickavachagam alias Kanchi Manimoliyar at Free Printers 147, Coral Merchant St., Madras. Joint Editor, M. Ilancheliyan B. A. ( onst

Best copy available.

